**அன்பு:** அன்பென்பது வெறும் சொல்லன்று; அது ஒரு செயல். மற்றவர்களின் நன்மைக்காக நடைபெறுவது. ஆனால் இந்தச் செயல்களால் வித்தியாசங்கள் ஏற்படுகின்றன. அதை அன்புக்கும் பாத்திரமானவர்களையே நாம் முதலில் கவனிக்கிறோம். மற்றவர்களை அடுத்தபடியாகத் தான் கவனிக்கிறோம். *** நான் நன்றாயிருந்தால்தான் மற்றவர்களுக்கு சேவை செய்யமுடியும் என்பதால், எனக்காக உழைப்பது அன்பு மார்க்கமாகிறது! ***

எதிர் கால அன்பு கிடையாது. இப்பொழுது நடைபெறும் செயலே அன்பு. வாழ்க்கையில் அன்பு காட்டப்படுவதனால் அன்பே கடவுள் என்பது அர்த்தம் **

பயத்தைத் தவிர்ப்பதற்காக பயத்தை ஏற்படுத்தக் கூடாது. யுத்தத்தை தவிர்ப்பதற்காக யுத்தத்தை ஏற்படுத்தக் கூடாது ***

“கல்விக்கும் செல்வத்திற்கும் அதிதேவதையாகப் பெண் தெய்வங்களை வைத்த பழந்தமிழர்கள், கொடூரமான சாவுக்கு எமன் என்ற ஆண் தெய்வத்தைத்தானே உருவகப்படுத்தினார்கள் ***

---

**வாழப் பிறந்தோம்: பக்கம் 38ன் தொடர்ச்சி:**

“ஆற்றலையாவது மகத்தான காரியங்களைச் சாதித்துவிட முடியும். என்ன சிரமப்பட்டாவது சரி, நமது ஆற்றல் நம்மைச் சதாகாலமும் முன்னேற்றப் பாதையிலேயே இட்டுச் செல்லக் கூடியதாய் இருக்கும்படி நாம் பார்த்துக் கொள்ள வேண்டும்” ***

“பொறுப்பு, ஒருவனைத் திடமானவனாக்கிக் கொண்டுவந்து விடும். பொறுப்புணர்ச்சியைப் போல நமது உள்ளத்தைக் கிளறி, அறிவை எழுப்பிவிட்டு, ஆற்றலை பொங்கி எழச் செய்யும் சக்தி வேறொன்றுமில்லை. ***

“பொறுப்பு வந்தால்தான் திறமை வெளிப்படும். இது சங்கடமான நிலைமைதான்! வழி என்ன? சந்தர்ப்பச் சாதகத்தால் பொறுப்பு வந்த போதெல்லாம் நாம் எப்பொழுதும் முயன்று கொண்டே இருக்க வேண்டும். நமது தொழில் அற்பம் என்ற எண்ணம், நாம் என்ன சாதித்துவிட முடியும், பேராசை எதற்கு என்ற அடக்கப் புத்தி, இவை எல்லாம் யாருக்கும், எக்காலமும் நன்மை செய்யப் போவதில்லை. ***

“சுக துக்கங்கள் மாறி மாறி வருவதுதான் வாழ்க்கையை வாழ்க்கையாகச் செய்யும் ஒவ்வொன்றும். ~~இந்த~~ இந்த உலகம் என்னுடையது. நான் செய்யும் ஒவ்வொரு காரியமும் என்னுடைய இந்த உலகத்தை ஆக்கவோ, அழிக்கவோ செய்து விடும்; ஆகவே நான் தனிப்புல் மேயக் கூடாது; செய்யும் கருமம் அனைத்தையும் பொறுப்புணர்ச்சியோடு செய்ய வேண்டும். வெற்று மட்டும் பாராது தைப் பொம்மையாகவோ, கருவியாகவோ, இருந்து, ஒதுங்கி வாழ்ந்து, நானே என்னை ராஜாவாக நினைத்துக் கொண்டு போகும் உலகின்னை பிணமாக இராமல் பொறுப்போடு நடந்து கொண்டு, யாரும் போற்றுக் கொள்ளச் சதா அறுவடைத்துக் கொண்டே இருப்பேனானால்; வெற்றி என்னுடையதே! ***

“தோற்றத்தைக் கண்டு ஏமாறாதே”; தோற்றமும் முக்கியமான விஷயம். ஆற்றலுக்கும் தோற்றத்துக்கும் நெருங்கிய சம்பந்தமுண்டு. ஆற்றலுக்கேற்றபடி ஒருவனுடைய தோற்றம் மாறவே செய்யும். ஆனால், அந்த மாறுதல் பொருத்தமாக நிகழ வேண்டும். கச்சிதமாக இருக்க வேண்டும். அப்போது அவனுடைய தோற்றம் அழகாக-கவர்ச்சியாக இருக்கும்! ***